# இரண்டாவதத்தியாயம்.

கசடு—எந்தச்சிஷனை பரிசுத்தனாகவும், அனுஷ்டான முள்ளவனாகவும், வித்தியாபொருளைக் காப்பாற்றுகிறவனாகவும், சாக்கிரதையுள்ளவனாகவும், அறிவாயோ அவனுக்கு என்னைச்சொல்லிவை யென்று சொல்லுகிறது.

கசசா—யாதொருவன் குருவுக்குத் தெரியாமல் ஓதுகிறவனிடத்தினின்றும் வித்தையை யடைகிறானோ அவன் வேதத்திருட்டோடு கூடினவனாய் நரகத்தை யடைகிறான்.

கசஎ—தர்க்கசாஸ்திரம் - வேதசாஸ்திரம் - வேதாந்தசாஸ்திரம் இவைகளில் ஒன்றையாவது எவனிடத்து ஓதுவானோ அவனை முன்னர் நமஸ்காரஞ் செய்யவேண்டியது.

கசஅ—பிராமணன் அனுஷ்டான முள்ளவனாய் காயத்திரியைமாத்திர மறிந்தவனா யிருந்தபோதிலும் உயர்ந்தவன், மூன்று வேதம் ஓதினபோதிலும் அனுஷ்டான மில்லாமல் சண்டவிடத்தில் புசிக்கிறவனாயும், சண்டவனுக்கு ஓதுவிக்கிறவனாயும் இருந்தால் உயர்ந்தவனல்லன்.

## குருபணிவிடை.



கசகூ—குருவின் ஆசனத்திலும், படுக்கையிலும், உட்காரவும் படுக்கவுங்கூடாது. தான் படுத்திருக்கும்போதும், உட்கார்ந்திருக்கும்போதுங் குருவந்தால் எழுந்திருந்து வந்தனஞ் செய்யவேண்டியது.

கஉ0—வயதினாலும், கல்வியினாலும், பெரியவர்கள் வரும்போது, சிறியவ னுட்கார்ந்திருந்தால் அவன் பிராணவாயு மேலெழுந்துபோக எத்தனப் படுகின்றது. எழுந்திருந்து வந்தனஞ்செய்வதால் அதன் நிலையை யடைகிறது.

# மநுதர்மசாத்திரம்.

கஉக—பெரியோர்களை நாள்தோறும் வந்தனஞ் செய்கிறவனுக்கும், அனுசரிக்கிறவனுக்கும் இருப்பவனுக்கு ஆயுள் - கல்வி - கீர்த்தி - பலம் இந்நான்கும் விர்த்தியடைகின்றது.

கஉஉ—பெரியோர்களை வந்தனஞ் செய்யும்போது இன்னான் வந்தனஞ் செய்கிறேனென்று தன் குலகோத்திர நாமதேயத்தைச் சொல்லி * அபிவாதனஞ் செய்யவேண்டியது.

கஉ௩—எவர்கள் பிரத்தியபிவாதனம் என்னும் - ஆசீர்வாதத்தை யறியமாட்டார்களோ அவர்களையும், மாதர்களையும், தன் பெயரைமாத்திரஞ் சொல்லி வந்தனஞ் செய்யவேண்டியது.

கஉ௪—தான் வந்தனஞ்செய்து, அபிவாதனஞ் செய்யும்போது, தன் நாமதேயத்தின் அந்தத்தில் போவெனனுஞ்சப்தத்தைச் சொல்லவேண்டியது. அந்தச் சப்தமானது பெயர்களின் சுவரூபமென்று ருஷிகளால் சொல்லப்படுகின்றது. அதாவது "சுபசர்மா நாமா-அஹம் - அஸ்மி போ" இவைமுதலானவை.

கஉ௫—சிறியோர்கள் தன்னை வணங்கும்போது அவன் பெயரையும், அதன்கடையில் அகாரத்தை மூன்று மாத்திரையாகவும், சொல்லி ஆயுஷ்மான் - ஆகவிருக்கக் கடவாயென்று வாழ்த்தவேண்டியது உதாஹரணம் - ஆயுஷ்மான் - பவ - தேவதத்தா - இவைமுதலியவை.

கஉ௬—மேற்சொல்லியபடி எந்தப் பிராமணனுக்கு ஆசீர்வாதஞ் செய்யத் தெரியமாட்டாதோ அவனுக்கு அபிவாதனஞ் செய்யக்கூடாது. அவன் - சூத்திரனுக்குச் சமமானவன்.

கஉ௭—வணங்கினபின்பு பிராமணனை குசலமாக விருக்கிறையாவென்றும், க்ஷத்திரியனை நோயற்றிருக்கிறையா வென்றும் வை

---

* அபிவாதனம் என்பது - தன்குலம், கோத்திரம், சூத்திரம், சாகை, இவற்றைச்சொல்வது.

சியனை க்ஷேமமாக விருக்கிறையாவென்றும், சூத்திரனை - சுகமாக விருக்கிறையாவென்றும், கேழ்க்கவேண்டியது.

கஉஅ—யாகஞ்செய்வதற்காக தீக்ஷைபெற்றிருப்பவன் சிறியவனா யிருந்தாலும், அவனைப் பெயரைச்சொல்லி தருமமறிந்தவன் அழைக்கக்கூடாது. போ - என்றும், பவான் - என்றும், அழைக்க வேண்டியது. இவ்விரண்டுசொல்லும் மரியாதையைக் காட்டும்.

கஉகூ—அன்னியன்மனைவி-தனக்குப்பந்துவல்லாத மாதர்கள் இவர்களை பவதி - சுபகே - பகினி - என்று அழைக்கவேண்டியது. இந்தச்சொற்கள் அக்கா - அம்மா - அம்மணி என்னும் மரியாதையைக் காட்டுகின்றது.

கநo—அம்மான் - சிற்றப்பன் - பெரியப்பன் மாமனார்- யாகபுரோகிதன் குரு இவாகள்வந்தால் எழுந்திருந்து வந்தனம் அபிவாதனம் செய்யவேண்டியது.

கநக—சிறியதாய், அம்மான்பெண்சாதி, மாமியார், அத்தை, இவர்கள் குருபத்தினிக்குச் சமானமானவர்களாதலால் குருபத்தினியைப்போல் பூசிக்கவேண்டியது.

கநஉ—தன் வருணத்திலே கலியாணஞ்செய்யப்பட்டிருக்கிற அண்ணன் பெண்சாதியை நாள்தோறும் வணங்கவேண்டியது. ஞாதி - சம்மந்தி இவாகளின் பத்தினிகளை ஊருக்குப்போய் வந்தபோதுமாத்திரம் வணஙகவேண்டியது.

கநந—பெரியஅத்தை, தாயுடன்பிறந்த பெரியதாய், சிறியதாய், இவர்களிடத்தில் தன்தாயைப்போல் மரியாதையா யிருக்கவேண்டியது. ஆனல் தாய் அவர்களைவிட உயர்ந்தவள்.

கநச—ஒருபட்டணம், ஊர், இதில் வசிக்கிறவர்கள் பத்துவயது மூத்தவனேடும், அதில் கானம் முதலிய வித்தையறிந்திருங்

நால் ஐந்துவயது மூத்தவனோடும், வேத மறிந்தவனானால் மூன்று வயது மூத்தவனோடும், தன் ஞாதிகளானால் கொஞ்சகால மூத்த வனோடும் சினேகஞ் செய்யவேண்டியது.

கஙரு—பத்து வயதுள்ள பிராமணனையும், நூறுவயதுள்ள க்ஷத்திரியனையும் தகப்பன் பிள்ளையாக வறியவேண்டியது. அதில் பிராமணன் தகப்பன் மரியாதையும், க்ஷத்திரியன் புத்திர மரியாதையும் வகிக்கவேண்டியது.

கஙசு—நியாயமாய்த்தேடியபொருள் சிற்றப்பன்முதலிய பந்துக்கள், உயர்ந்தவயது, நல்லொழுக்கம், கல்வி, இவ்வைந்தும் ஒருவனை பூசிப்பதற்குக் காரணமா யிருக்கின்றது. ஆனால் இவைகள் கிரமமாக ஒன்றிலொன்றுயர்ந்தது.

கஙஎ—மூன்று வருணத்தாரில் எவனிடத்தில் மேற்சொன்ன ஐந்துகுணங்களில் எவன் இரண்டுமூன்று குணங்களை யுடைத்தானவனா யிருக்கிறானோ, அவனை ஓரேகுணமுடைய வொருவன் பூசிக்கவேண்டியது. தொண்ணூறுவயதுக்கு மேற்பட்ட சூத்திரனை எல்லோரும் மரியாதை செய்யவேண்டியது.

கஙஅ—பண்டிமுதலியவாகனத்தில் வருகிறவன், தொண்ணூறுவயதுக்கு மேற்பட்டவன், நோயுள்ளவன், சுமையாளி, மாதாகள், அனுஷ்டானமுள்ள பிராமணன், அரசன், கலியாணஞ் செய்யப்போகிற மாப்பிள்ளை, இவர்களுக்கு மற்றவர்கள் வழிவிடவேண்டியது.

கஙகூ—மேற்சொன்ன யாவரும் ஒன்றாகவந்தால் அரசன் அனுஷ்டானமுள்ள பிராமணன் இவர்களுக்கு வழிவிடவேண்டியது. அவ்விருவரும், கூடிவந்தால் அரசனைக்காட்டிலும் அனுஷ்டானமுள்ள பிராமணனுக்கு வழிவிடவேண்டியது.

கசா—எவன் உபநயனஞ்செய்வித்து யாகமந்திரங்களையும் வேதவேதாந்தங்களையும் ஓதுவிக்கிறனோ அவனை ஆசாரியனென்று சொல்லுகிருர்கள்.

கசக—எவன் வேதத்திலும் யாகாதி மந்திரங்களிலும்,கொஞ்சம் சம்பளம்வாங்கிக்கொண்டு சொல்லுவிக்கிறனோ அவனை உபாத்தியாயனென்று சொல்லுகிருர்கள்.

கசஉ—எவன் கர்ப்பாதானமுதலிய கிரியைகளைச் செய்வித்து, ஜீவனோபாயத்தைக் கற்பிக்கிறனோ, அவனை குருவென்றுசொல்லுகிருர்கள்.

கசங—எவன் அக்கினிசந்தானம் அக்கினிஹோமமுதலியயாகம் இவைகளைச் செய்விக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்ளப்பட்டவனாய் செய்விக்கிறனோ அவனை ரித்துவிக்கென்று சொல்லுகிருர்கள்.

கசச—எவன் ஸ்வரத்தோடுகூடியவேதத்தின் உச்சரித்தலால் தன்னிரண்டுகாதுகளையும், பரிபூரணஞ்செய்விக்கிறனோ அவன் தாயதந்தைக்குச் சரியானவன். அவனுக்கொருநாளுந் துரோகஞ்செய்யக்கூடாது.

கசரு—உபாத்தியாயனைவிட ஆசாரியன் பத்துப்பங்குயர்ந்தவன்-ஆசாரியனைவிட உபநயனாதி சமஸ்காரஞ் செய்வித்த தகப்பன் நூறுபங்குயர்ந்தவன். அத்தகப்பனைவிட தாய் தன்மகிமையால் ஆயிரம்பங்குயர்ந்திருக்கிறள்.

கசசு—பெற்றதகப்பனைவிட இரண்டாவதான பிராமண ஜனனம் வரத்தக்க பிரம்மவுபதேசஞ்செய்கிற ஆசாரியனுயர்ந்தவன். அந்தவிரண்டாவது பிறப்பானது இம்மையிலும் மறுமையிலும் அழியாதது.

கசஎ—மாதாவும் பிதாவும் காமத்தினலேபுணர்ந்து யோனிவழியாக எந்தப்பிறப்பை யுண்டுபண்ணுகிருர்களோ அந்தப்பிறப்

பானது மிருகசாதியைப்போல, அவயவங்களைமாத்திரம் கொடுக்க வல்லமையுள்ளது.

கசஅ—ஆசாரியன் விதிப்படி எந்தவிரண்டாவது ஜனனத்தைப் பிரம்மவுபதேசத்தினு லுண்டுபண்ணுகிருனே, அந்தப்பிறப்பானது அழிவற்றதாயும், மூப்பற்றதாயும், புண்ணியலோகங்களைக் கொடுக்கிறதாயும் இருககின்றது.

கசகூ—சாஸ்திரவிஷயத்தில் கொஞ்சமாவது, நிரம்பவாவது, எவன் உபகாரஞ்செய்கிருனே அவனையும் குருவென றறியவேண்டியது.

கருO—இரண்டாவது ஜனனத்தை யுண்டுபண்ணுகிறவனையும், தன்சாதிதருமத்தை வேதத்திற்சொல்லியபடி அறிவிக்கிறவனையு மிருப்பவன் தன்னைவிட சிறியவனுயிருப்பினும், சாஸ்திரப்படி தகப்பனுக்குச் சரியாகிருன்.

கருக—உ ,ாகரணம்-குழந்தையாயும், வித்துவானுயுமிருக்கிற ஆங்கீரசன்பிள்ளையானவன் தன்பிதுாககளுககு வேதமோதிவைத்தான். அப்போது அவாகளை ஞானத்தினல் சிஷாகளாக மதித்து அவர்களை பிள்ளைகாளென்றழைத்தான.

கருஉ—அந்தப்பிதுர்க்கள் அதனுற்கோபங்கொண்டு அதைதேவர்களிடத்திற் சொல்லிக்கொண்டார்கள். தேவாகளும் சபைகூடி உங்கள்குழந்தை உங்களையப்படி கூப்பிட்டதுசரிதான் என்று நியாயஞ்சொல்லத்தொடங்கினுர்கள்.

கருங—தெரியாதவன் பிள்ளையாகவும் தெரிந்தவன் தகப்பனுகவுஞ் சொல்லப்படுகிருன். இப்படியேசாஸ்திரத்தாலும் பெரியோர்களாலுஞ் சொல்லப்பட்டிருக்கின்றது.

# இரண்டாவதத்தியாயம்.

கருச—வயது - நரை-பொருள்-பாந்தவியம் - இவைகளாலே ஒருவன் பெரியவனாகமாட்டான் தெரிந்தவனே நமக்குப்பெரியவன் என்று ருஷிகள் தருமத்தை ஏற்படுத்தியிருக்கிறார்கள்.

கருரு—பிராமணாகளுக்கு ஞானத்தினாலும், க்ஷத்திரியாளுக்கு வீரியத்தினாலும், வைசியனுக்கு தானியம் - பொருள்-இவைகளினாலும், சூத்திராளுக்கு-வயதினாலும் மேன்மையுண்டாகிறது

கருசு—நரையினால்மாத்திரம் விருத்தனாகமாட்டான்- சிறுவனாயிருந்தாலும் வேதப்பொருளறிந்தவனே விருத்தன. என்றுதேவாகள் தீரமானஞ்சொன்னாகள்.

கருஎ—மரத்தினாற் செய்யப்பட்டயானை-தோலினாற்செயயப்பட்ட மிருகம் - வேதம் ஓதாதபிராமணன்- இம்மூவரும் உபயோகமில்லாதவர்கள். பெயரைமாத்திரம் பரிக்கிறது.

கருஅ—மாதர்களிடத்தில் பேடியும், பசுமாட்டினிடத்தில் பசுமாடும், தெரியாதவனிடத்திற் கொடுத்ததானமும் எப்படி பயனில்லாததோ, அப்படியே வேதமோதாத பிராமணன் பயனில்லாதவன்.

கருகூ—தருமமறிந்த ஆசாரியன் ஹிதோபதேசம் செய்விக்கும்போது பிரம்புமுதலிய கருவிகளால் சிக்ஷை அதிகமாக அடியாமல் தருமத்தை உபதேசிக்கவேண்டியது. வாயினாலும் குரூரமில்லாமல் தாய்போல் பிரியமாய் பேசவேண்டியது.

கசுo—எவனுக்கு வாக்கும் மனதும் பொய்சொல்லாமலும், இராகத்துவேஷத்தை யடையாமலும்: பரிசுத்தமா யடக்கப்பட்டிருக்கிறதோ, அவன் வேதாந்தசாஸ்திரத்திற் சொல்லிய எல்லாப்பயனையுமடைகிறான்.

கசுக—ஒருவன் தான் துன்பத்தை யடைந்திருந்தாலும் அன்னியனைப்பார்த்துத் துன்பம்வரும்படி பேசக்கூடாது. செய்கை

னாலும் மனதினாலும் ஒருவனுக்குத் துரோகஞ் செய்யக் கூடாது. கொடுமையாக அமங்கலமான வார்த்தைகளைச்சொன்னால் சுவர்க்காதி புண்ணியலோகங்களை யடையமாட்டான்.

கசுஉ—பிராமணன் தனக்கு அயலான்செய்கிற மரியாதையை விஷத்தைப்போல நினைத்து அஞ்சவேண்டும். அவமானத்தை அமிர்தத்தைப்போல விரும்பவேண்டும்.

கசுஈ—அவமானத்தாற் றுன்பத்தையடையாதவன் சுகமாகத் தூங்கியெழுந்திருக்கிறான். சுகமாக இவ்வுலகத்திலுஞ் சஞ்சரிக்கிறான். அவனை அவமானஞ்செய்தவன் தானே அழிந்துபோகிறான்.

கசுச—இப்போது நானசொல்லிவந்த சாதகாமமுதல் உபநயனவரையில், சொல்லிய சமஸ்காரத்தினால், பரிசுத்தனான துவிஜன் குருவினிடத்தில், வசித்து அவசரப்படாமல், வேதத்தைசகிரமமாக வோதவேண்டியது.

கசுரு—வேதத்திற் சொல்லப்பட்ட பலபல நியமங்களாலும் அன்னபிக்ஷை முதலான விரதத்தினாலும், பரிசுத்தனான துவிஜனாலே வேதமுழுதும் ஓதத்தக்கது. பின்பு வேதாந்தமும், ஓதவேண்டியது.

கசுசு—தவஞ்செய்யவிருப்பமுள்ள துவிஜனானவன், வேதாத்தியயனஞ் செய்யவேண்டியது. அதுவே இவனுக்கு மேலான தவமாகச் சொல்லப்படுகின்றது.

கசுஎ—எவன் நாள்தோறுந் தன்சக்திக்குத் தக்கபடி வேதத்தில் நாலுவாக்கியமாவது ஓதுகிறானோ, அவன் பாதாதிகேசவரையில் தவஞ்செய்கிறவனாகச் சொல்லப்படுகிறான்.

கசுஅ—எந்தத் துவிஜனானவன் வேதத்தையோதாமல் வேறான அர்த்தசாஸ்திரத்தில் முயற்சிசெய்கிறானோ அவன்ஜீவித்திருக்கும்போதே தன்வம்சத்தாருடன் சூத்திரனாகிறான்.

கசுக—துவிஜனுக்கு முதற்பிறப்புத்தாயாலும். இரண்டாவது உபநயனத்தாலும், மூன்றாவது எக்கியதிக்ஷயாலும், உண்டாகிறதென்று வேதத்திற்சொல்லப்படுகின்றது.

கஎ0—அதில் மிஞ்சி கட்டுவதை அடையாளமாக உடைத்தான இரண்டாவதுபிறப்புக்கு காயத்திரியைத்தாயாகவும், ஆசாரியனைத் தகப்பனாகவுஞ் சொல்லுகிறார்கள்.

கஎக—வேதத்தை ஓதுவிக்கிறதினால் ஆசாரியனையும் ஒருதகப்பனாகவே சொல்லுகிறார்கள். உபநயனஞ் செய்துகொண்டு வேதமோதாவிட்டால் இவன் ஒரு வைதீக காரியத்துக்கும் உதவமாட்டான்.

கஎஉ—உபநயனஞ்செய்துகொள்ளுவதற்குமுன்பு இவன்சூத்திரனுக்கொப்பானவன் ஆனால் மாதா-பிதார் காமத்தில்மாத்திரம் அதற்குவேண்டிய வேதமந்திரஞ் சொல்லலாம்.

கஎ௩—உபநயனமான பின்பு தான இவனுக்கு * சமிதாதான முதலிய விரதானுஷ்டானமும், வேதாத்தியயனமும், கிரமமாக விதிக்கப்பட்டிருக்கின்றது.

கஎச—எந்தவருணத்தாருக்கு, எந்தமிருகத்தின் சாமமும், எவ்விதபூணூலும், எவ்விதமிஞ்சியும், எவ்விததண்டமும், எவ்விதவஸ்திரமும், விதிகப்பட்டிருககிறதோ அவைகளை அவனவன் விரதானுஷ்டான சாலங்களிலுந் தரிக்கவேண்டியது.

## பிரமசாரிவிரதம்.

கஎரு—குருவின்குலத்தில் வாசஞ்செய்கிற பிரமசாரி தன்னிந்திரியங்களெல்லா மடக்கிக்கொண்டு மறுமைக்குரிய தவம் விருத்தியடையும்பொருட்டு மேற்சொல்லப்போகிற நியமங்களை யனுஷ்டிக்கவேண்டியது.

---

* சமிதாதானம் என்பது சமித்தினாலே அக்கினியிற்செய்யும்ஓமம்.

கஎசு—நாள்தோறும் விடியற்காலையில் நதிஜலத்தில் ஸ்நானம்பண்ணி பரிசுத்தனாய் தேவர்-ருஷி - பிதுர் தருப்பணங்களையும் தன்னிஷ்டதேவதையின் பூசையையும், இரண்டுவேளை சமிதா தானத்தையும் செய்யவேண்டியது.

கஎஎ—தேன்-மாம்சம்-கந்தம்-புஷ்பம்-தித்திப்பு-ஸ்திரீகள்-தயிர்-பால்-நெய்-மோர-ஜீவஹிம்சை.

கஎஅ—அப்பியங்கனம்-அஞ்சனம்-செருப்பு - குடை-காமம்-குரோதம்-லோபம்-கூத்து-பாட்டு.

கஎகூ—சூதாடல்-வம்பளத்தல்-பழிசொல்லுதல்-பொய்சொல்லுதல்-மாதரகளை ஆசையோடு பாாகக விரும்புதல்-ஒருவருககுத் துரோகஞ்செய்தல் இவைகளை நீககவேண்டியது.

கஅ௦—எப்போதும் பிரமசாரி தனியாகவே படுககவேண்டியது. காமத்தினலே இநதிரியத்தை வெளிப்படுத்தககூடாது. அப்படிசெய்தால் தன்விரதமழிநதுபோய்விடும்.

கஅக—பிரமசாரிக்குக் காமமில்லாமல் சொப்பனத்தில் இந்திரியம் வெளிப்பட்டால் பிராதககாலையில் ஸ்நானஞ்செய்து சூரியனை நமஸ்கரித்து " புநகா,, என்னுமந்திரத்தை மூன்றுதரஞ் சொல்லவேண்டியது.

கஅஉ—தண்ணீர்-தேவபூசைக்குரியமலாகள் - சாணம்-மண்-தருப்பை-இவைகளை - குருவுக்கு வேண்டியமட்டில் கொண்டுவந்து கொடுக்கவேண்டியது. தானும் நாள்தோறும் பிக்ஷையெடுத்துச் சாப்பிடவேண்டியது.

கஅரு—வேதம்-எக்கியம்- இவைகளுள்ளவர்களாயும், சந்தியாவந்தனமுதலிய தன்றன் கர்மங்களைச் சாக்கிரதையாய்ச்செய்பவாகளாயுமிருக்கிற கிரகஸ்தாள்வீட்டில் பிரமசாரி நாள்தோறும் அன்னபிக்ஷை யெடுக்கவேண்டியது.

கஅச—குருவின் குலத்திலும், அவர்பங்காளி - பந்து - இவர்கள்வீட்டிலும், பிக்ஷை வாங்கக்கூடாது. வேறே வீடில்லாவிட்டால் குருவின் பந்துக்களின் வீட்டிலாவது, அது வில்லாவிட்டால் அவர் பங்காளிவீட்டிலாவது, அதுவு மில்லாவிட்டால் குருகுலத்திலாவது வாங்கிக் கொள்ளலாம்.

கஅரு—முன் சொன்னபடியே வேத - எக்கியமுதலிய அனுஷ்டான முள்ளவர்க ளில்லாவிடில் ஊர்முழுதும் மௌனத்துடன் சஞ்சரித்து மஹா பாவிகள்வீடு நீங்கலாக எங்கையாவது பிராமணுள்வீட்டில் பிக்ஷை வாங்கிக்கொள்ள வேண்டியது.

கஅசா—வனத்தில் பரிசுத்தமான விடத்திற்குப்போய், விதிப்படி பலாசமுதலிய சமித்துக்களைக் கொண்டுவந்து, கையில் வைத்துக்கொண்டு, வெய்யிலி லுலர்த்தவேண்டியது. அதற்குச் சக்தியில்லாவிட்டால் இறப்பிலாவது உலாத்தவேண்டியது. அந்தச் சமித்துக்களாலே காலையும், மாலையும், அக்கினியில் ஓமஞ்செய்ய வேண்டியது. இதுதான் சமிதாதானம்.

கஅஎ—பிரமசாரியானவன் தனக்கு நோயில்லா திருக்கும்போது ஏழுநாள் பிக்ஷையெடாமலும், சமிதாதானஞ் செய்யாமலு மிருந்தால் விரதப் பிரஷ்டனுகிறுன். அதற்கு அவகீர்ணி விரதத்தைச் செய்யவேண்டியது (அவகீர்ணிவிரதம் பதிேனுரா மத்தியாயத்திற் காண்க.)

கஅஅ—பிரமசாரி எப்போதும் பிக்ஷையெடுத்தே புசிக்கவேண்டியதே தவிர, ஒருவனன்னத்தைப் புசிக்கக்கூடாது. பிக்ஷையெடுத்துப் புசிப்பதை அவனுக்கு உபவாசத்திற் கொப்பாகச்சொல்லுகிறுர்கள்

கஅகூ—யாகாதி காரியத்திலும், சிரார்த்த காரியத்திலும், தன்னையொருவன் தன்வீட்டில் சாப்பிட வேண்டுமென்று மிகவும்பி

ரார்த்தனை செய்தால் அப்போது தன்னியமப்படி ரிஷிகளைப்போல் மதுமாம்சாதிக ளீங்கலாக ஒருவ னன்னத்தைச் சாப்பிடலாம். அதனால் இவன்விரத மழியமாட்டாது.

கக0—இந்தப்படி யொருவனன்னத்தைப் புசிப்பது பிராமண பிரமசாரிக்குமாத்திரமே தவிர மற்றவாகளுக்குக் கூடாதென்று பெரியோாகள் சொல்லுகிறார்கள்.

கக௧—குருவானவா ஆக்கியாபித்தாலும், இல்லாவிட்டாலும் வேதாத்தியயனத்திலும், குருவின் பணிவிடையிலும், தானே நாள்தோறும் முயற்சி செய்யவேண்டியது.

கக௨—சரீரம் - வாக்கு - புத்தி - பஞ்சேந்திரியம் - மனது - இவைகளை அடக்கிக்கொண்டு, கைகளைக் கூப்பிக்கொண்டு, குருவுக்கு எதிராக குருவின்முகத்தைப் பாாத்துக்கொண்டு நிற்கவேண்டியது.

கக௩—எப்போதும் உத்தரீயத்துக்கு வெளியில் தன வலது கையை வைத்துக்கொண்டிருக்கவேண்டியது. அதாவது போர்த்துக்கொள்ளாமலிருத்தல் - உட்காாந்து கொள்ளென்றுகுரு வுத்தரவு செய்தால் அவருக்கெதிராக பாிசுத்தனுய் மறைக்கவேண்டிய அவயவங்களை வஸ்திரத்தினல் மறைத்துக்கொண்டு உட்காரவேண்டியது.

௧க௪—குருவினிடத்தில் வாசஞ் செயயும்போது உயர்ந்த அன்னத்தைப் புசிக்கவும், உயர்ந்த வஸ்திரத்தைத் தரிக்கவுங்கூடாது. உயர்ந்த வேஷத்தோடு இருக்கவுங்கூடாது, விடியற்காலத்தில் குரு வெழுந்திருப்பதற்கு முன்னர் தானெழுந்திருக்க வேண்டியது. இரவில் அவா படுத்து நித்திரை செய்தபின் தான் படுக்க வேண்டியது.

கக௫—குருவின் ஆக்கினையை சீஷன் படுத்துக்கொண்டும், உட்கார்ந்துகொண்டும், சாப்பிட்டுக்கொண்டும், நடந்துகொண்டும்,

பராமுகமா யிருந்துகொண்டும், கேழ்க்கக்கூடாது, மறுமொழியுஞ் சொல்லக்கூடாது.

கககூகா—குரு உட்காரந்துசொல்லும்போது, தானின்றுகொண்டும், அவர்நிற்கும்போது அவர்கருச்சமீபத்தில் நின்றுகொண்டும், அவர்தனக்கெதிராகவந்து சொல்லும்போது, தானெதிர்கொண்டுபோயும், அவர்நடக்கும்போது. தான்பின்றொடர்ந்து ஓடிக்கொண்டும்.

கககூஎ—அவர்பராமுகமாக விருக்கும்போது, அவர்முகத்துக்கெதிராகவந்தும், அவாதூரத்திலிருக்கும்போது கிட்டவந்தும்- படுத் திருக்கும்போதும் - சமீபத்திலிருக்கும்போதும் - தன்தேகத்தை தவணக்கிக்கொண்டும்- அவர் ஆக்கினையைக்கேழ்க்கவும் மறுமொழி சொல்லவும்வேண்டியது.

கககூஅ—குருவின ஆசனத்திற்கும்-படுக்கைக்கும்-தன் ஆசனமும் படுக்கையுந் தாழ்ந்திருககவேண்டியது. குருபார்க்குமிடத்தில் தான் இஷ்டப்படி ஆசனத்திலுட்காரப்போகாது.

கககூகூ—இந்தக்குருவின்பெயரை அவரில்லாதவிடத்திலும் குரு உபாத்தியாயர் - என்கிற மரியாதைச்சொல்லன்றியும் சொலலக்கூடாது - அவருடைய நடத்தை - நடை - சொல் இவைகளைத் தானனுசரிக்கலாகாது.

உ௦௦—எந்தவிடத்தில் குருவுக்கு அபவாதமும் நிந்தையுஞ் சொல்லப்படுமோ அவ்விடத்தில் தன்காதுகளை மூடிக்கொள்ளவேண்டியது. அல்லது வேறிடத்துக்காவது போகவேண்டியது.

உ௦க—சீஷன்குருவைப் * பழித்தால் கழுதையாகவும் × நிந்தித்தால் - நாயாகவும் - குருவின்பொருளை யநுபவித்தால் புழு

---

* இருக்கின்றதோஷத்தைச்சொல்வது-பழித்தல்.

× இல்லாததோஷத்தைச்சொல்வது-நிந்தித்தல்.

வாகவும் - அவர்பெருமையைக்கண்டு பொறுமைப்பட்டால் உலண்டுபூச்சியாகவும் பிறக்கிறன்.

உ௦உ—தான் தூரத்தி லிருந்துகொண்டு மற்றொருவனை யனுப்பி குருவுக்குப் பணிவிடைசெய்யக்கூடாது. தனக்கு கோபம்நேரிட்டிருக்கும்போதும்- குரு மனையாளோடிருக்கும்போதும். தான் போய்ப் பூசிக்கலாகாது. வாகனத்திலும் ஆசனத்தினிலுந் தானிருந்தால் அவைகளினின்றுந் தானிறங்கிப் பூசிக்கவேண்டும்.

உ௦௩—எதிர்காற்றடிக்கும்போதும் - பின்காற்றடிக்கும்போதும்-குருவுக்கெதிரில் உட்காரக்கூடாது குருகேளாதிருக்கும்போது ஒருசங்கதியும் அவருக்குச்சொல்லக்கூடாது.

உ௦௪—மாட்டுபண்டி - குதிரைபண்டி - ஒட்டகம்-உப்பரிகை-படிகள் - கற்பலகை - ஓடம் - இவைகளில் - குருவோடுசீஷன்- சமமாகவிருக்கலாம்.

உ௦௫—குருவுக்குக் குருவந்திருக்கும்போது, அவருக்கும் குருவைப்போல வர் தனைவழிபாடு செய்யவேண்டியது. தான்குருவின் வீட்டிலிருக்கும்போது தன்தாய்தகப்பன் முதலியவாவந்தால் அவாகளை குருவினுத்தரவு அன்றி வந்தனம்செய்யக்கூடாது.

உ௦௬—வித்தைசொல்லி வைத்தகுரு, உபாத்தியாயர், தன் சிற்றப்பன், பெரியப்பன்முதலானவர்கள் அதாமம் செய்யவேண்டாமென்றவர்கள் - தருமத்தை யுபதேசித்தவர்கள், இவர்களிடத்திலும் ஆசாரியனைப்போலவே மரியாதைசெய்யவேண்டியது.

உ௦௭—கல்வி - தவம் - முதலியவற்றால் உயர்ந்தும் - தன்வருணத்தில் விவாகஞ்செய்யப்பட்ட மாதினிடத்திற் பிறந்தும் - இருக்கிற குருபுத்திராளிடத்திலும் அவர்பங்காளிகளிடத்திலும் குருவைப்போலவே மரியாதைசெய்யவேண்டியது.

உ0அ—தனக்குச் சிறியவனையிருந்தாலும், சரியானவயதுள்ளவனையிருந்தாலும், மூன் தனக்குச்சிஷனையிருந்தாலும், வேதமுற்றும் ஓதினவனையாவது, குருபுத்திரனையாவது இருந்து, தான் எக்கியஞ்செய்யுஞ் சமயத்தில்வந்தால், அவர்களுக்குக் குருவின்மரியாதையைச் செய்யவேண்டியது.

உ0க—குருவின்புத்திரனுக்கு குருவைப்போலமரியாதைசெயவதில் சரீரத்தைதேய்ப்பதையும் - எண்ணெய் தேய்ப்பதையும் - எச்சல்சாப்பிடுவதையும் - காலைக்கழுவுவதையும்-செய்யக்கூடாது.

உகo—குருவுக்குத் தன்வருணத்தில் கலியாணஞ்செய்த மாதர்கள் நியமித்தல்முதலிய குருவுக்குரியவைபோலவே செய்யவேண்டியது. வேறுசாதியாயிருந்தால் எழுந்துவந்தன மாத்திரஞ் செய்யவேண்டியது.

உகக—குருவின்பத்தினிக்கு-எண்ணெய்தேய்த்தல் - ஸ்நானஞ்செய்வித்தல் - உடம்புதேய்த்தல் - தலையாற்றுவித்தல் - இவைகளைச்செய்யக்கூடாது.

உகஉ—குருபத்தினி யௌவனமாயிருந்தால் அவளை நமஸ்காரஞ் செய்யும்போது இருபதுவயதுள்ளவனும் குணதோஷங்களைப்பகுத்தறியும் விவேகியுமாயிருக்கிற சிஷன் கால்களைத்தொடக்கூடாது.

உகங—மாதர்களின்சுபாவமே மனிதர்களுக்கு சுருங்காரசேஷ்டைகளினால் தோஷத்தையுண்டுபண்ணும் ஆதலால் தெரிந்தவர்கள் அவர்களிடத்தில் அசாக்கிரதையாயிரார்கள்

உகச—ஜிதேந்திரியனை யிருந்தாலும் மூடனையிருந்தாலும் அவனைமாதர்கள் தன்சம்பந்தத்தினால் காமக்குரோதத்துக்கு உட்பட்டவனாகச் செய்கிறார்கள்.

உகரு—தாய் - தங்கை - பெண் - இவர்களுடனும் தனியாய் ஒன்றாகவுளுக்காரக்கூடாது. இந்திரியங்களின் கூட்டமானது மிகவும் பலமுள்ளது அது - தெரிந்தவனையும் மயக்கிவிடும்.

உகசு—குருவின் பத்தினிகள் யௌவனமாகவும் தானும்யௌவனனுயிருந்தால் காலுகளைத்தொடாமல் அபிவாதனஞ்செய்யவேண்டியது.

உகஎ—சிஷன் - தானூருக்குப்போய் வந்தபோதும், ஊரிலிருக்கும்போதும், நித்தியமும் விருத்தாளான குருபத்தினிகளின் காலைத்தொட்டு வந்தனஞ்செய்யவேண்டியது. இது பெரியோர்களின் தருமம்.

உகஅ—ஒருமனிதன் பூமியை மண்வெட்டியால் வெட்டுகிறதினுலே ஜலத்தை யெப்படியடைகிறனே, அப்படியே சிஷன் பணிவிடைசெய்வதால் குருவினிடத்திலேயுள்ள வித்தையை யடைகிறன்.

உகக—பிரமசாரி தலையை முழுது மொட்டையடித்துக்கொண்டிருந்தாலு மிருக்கலாம், அல்லது தலைமுழுதுஞ் சடைதரித்துக்கொண்டாலும் கொள்ளலாம், அல்லது குடுமிமட்டுஞ் சடைதரித்துக்கொண்டு மற்றதை க்ஷவரஞ் செய்துகொண்டாலும் கொள்ளலாம் இவ்வித பிரமசாரிகள் ஒருபோதும் சூரிய னுதயாஸ்தமனகாலங்களில் நித்திரைசெய்யக்கூடாது.

உஉ0-தூக்கத்தில் ஆசையினுலாவது, அரியாமையினுலாவது, அவர்கள் உதயத்திற் றூங்கினுல் அன்றுமத்தியானமும், அஸ்தமனத்திற் றூங்கினுல் அன்றிரவும் காயத்திரி செபஞ்செய்துகொண்டு உபவாசமாயிருக்கவேண்டியது.

உஉக—அப்படி தூங்கினதற்காகப் பிராயச்சித்தஞ் செய்துகொள்ளாவிட்டால் மஹாபாவத்தோடு கூடினவர்களாய் நரகத்தையடைவர்.

உஉஉ—ஆகையால் அவ்விரண்டுசந்தியிலும், தூங்காமல் சாக்கிரதையாய் ஆசமனஞ்செய்து ஆசாரத்துடன் சந்தியாவந்தனஞ்செய்து பரிசுத்தமான விடத்திலிருநது செபஞ்செய்து † உபஸ்தானமும் விதிப்படி செய்யவேண்டியது.

உஉங—மாதர்களேனும், சூத்திரனேனும், ஒரு நல்லகாரியத்தைச்செய்தால் அதையும், தன் மனதுககிஷ்டமான காரியத்தையுஞ் சாஸ்திரத்துககு விரோதமின்றிச செய்யலாம்.

உஉச—சிலபெரியோாகள தாமாாத்தஙகளைக் காமத்துக்குக் காரணமா யிருப்பதால் உயாந்ததென்றும் சிலா அர்த்தகாமங்களை சுகத்துககுக் காரணமாயிருப்பதால உயாநததென்றும், சிலர் தர்மத்தை அாத்தகாமஙகளுககுக காரணமா யிருப்பதால் உயர்ந்ததென்றும், சிலர் அர்த்தத்தை தாம்மசாமஙகளுக்குக காரணமாயிருப்பதால் உயாந்ததெனறும், சொல்லுகிறாாகள். இந்தத் தர்மார்த்தகாமஙகள் ஒனறுக்கொன்று விரோதமினறி யிருந்தால் மூனறுமுயாந்ததென்பது என்னுடைய அபிப்பிராயம்.

உஉரு—ஞானத்தைக கற்பிககிறதினல் ஆசாரியன் பரமாத்துமாவின் உருவமாகவும், உண்டுபண்ணுவதால் தகப்பன் பிரமனுருவமாகவும், தன்னைத் தரித்திருந்ததால் மாதா பூமியினுருவமாகவும், சகோதரன தனனோடுகூடப் பிறந்தமையால் ஆத்மாவினுருவமாகவும், எண்ணத்தககவாகள்.

உஉசு—ஆசாரியன் - பிதா - மாதா - ஜேஷ்டபிராதா - இவர்களை தனக்குக் கஷ்டம் வநதிருந்தபோதிலும், அவமானஞ் செய்யக்கூடாது அதிலும் பிராமணன் ஒருக்காலும் செய்யப்போகாது.

உஉஎ—மாதாபிதாக்கள பிள்ளையைப் பெறுகிறவிஷயத்தில் பிரசவவேதனை தொடஙகி, வித்தையைக் கற்பிக்கிறவரையில் எவ்

† உபஸ்தானம் எனபது சூரியநமஸ்காரம்.

வளவு கஷ்டப் படுகிறார்களோ அதற்குப் பிரதியுபகாரம் எத்தனை ஜனன மெடுத்தபோதிலும் செய்யவரிது.

உஉஅ—தாய் - தந்தை - ஆசாரியன்-இவர்களின் இஷ்டத்தைத் தினந்தோறுஞ் செய்யவேண்டியது. அவர்கள் சந்தோஷப் பட்டிருந்தால் எல்லாதவப் பலன்களும் உண்டாகும்.

உஉகூ—அம்மூவர்களுக்கும் பணிவிடை செயவதையே உயர்ந்த தவமாகச் சொல்லுகிறார்கள். ஆகையால் அவர்களி னுத்தரவன்றிச் சுயமாய ஒரு வேறு தருமத்தைச் செய்யலாகாது.

உ௩௦—அந்த மூவருமே மூவுலகமாகவும் மூன்று சிரமங்களாகவும் மூன்று வேதங்களாகவும், மூன்றக்கினிகளாகவும் சொல்லப்படுகிறார்கள்.

உ௩க—அதில் தகப்பன் - காருக பத்தியாக்கினியாகவும், மாதா தக்ஷிணக்கினியாகவும் ஆசாரியன்-ஆகவனீய அக்கினியாகவும், சொல்லப்படுகிறார்கள். இந்தமூன்றக்கினிதான் திரேதாக்கினியைவிட உயர்ந்தன.

உ௩உ—இந்த மூன்றுபேர்களிடத்திலும், பக்தியுள்ளவன் மூன்றுலோகங்களையுஞ் செயித்தவனாய் சூரியாதி தேவர்கள்போல் ஒளியுள்ள சரீரத்துடன் சுவர்க்காதி லோகங்களை யடைவன்.

உ௩௩—மாதுருபக்தியால் இம்மையிற் சுகத்தையும், பிதுர் பக்தியால் சுவர்க்கசுகத்தையும் ஆசாரியபக்தியால் பிரம்மலோக சுகத்தையும் அடைகிறான்.

உ௩ச—எவனாலே இம்மூவர்களும் ஆதரிக்கப்பட்டிருக்கிறார்களோ அவனுக்கு சகலதர்மங்களும் பலனைக்கொடுக்கும், எவனாலே ஆதரிக்கப் படவில்லையோ அவனுக்கு சகல தர்மங்களும் பலனற்றதாகிவிடும்

# ரண்டாவதத்தியாயம்.

௨௩௫—அம்மூவர்களும் எதுவரையிலுஞ் ஜீவித்திருப்பார்களோ அதுவரையில வேறுதர்மத்தில் மனம்வையாமல் அவர்களின் பணிவிடையை அன்போடு செய்யவேண்டியது.

௨௩௬—அவர்களின் பணிவிடைக்கு விரோதமில்லாமல் அவர்களுத்தரவின்பேரில் மனோவாக்கு காயஙகளால் பரலோகத்துக்குதவியான யாதாவதொருதருமத்தைச் செய்யவேண்டியது. செய்தபின்னும் அவாகளுக்கு அறிவிக்கவேண்டியது.

௨௩௭—இவர்களிடத்திற் பணிவிடை செய்வதுதான் மேலானதாமம். மற்ற எக்யாதிகருமஙகள் இரண்டாம்பக்ஷமான தருமமாகச் சொல்லப்படுகின்றன.

௨௩௮—அன்புள்ளவன் மேலானவித்தையை சூத்திரனிடத்திலிருந்தாலும், மோக்ஷகருமத்தை சண்டாளனிடத்திலிருந்தாலும், ஸ்திரீ ரத்தினத்தை தனககுந் தாழ்ந்தகுலத்திலிருந்தாலுங் கிரகித்துக் கொள்ளலாம்.

௨௩௯—அமிர்தம் விஷத்திலிருந்தாலும் - நல்லவசனம் சிறுவனிடத்திலிருந்தாலும் - நலலொழுக்கஞ் சத்துருவினிடத்திலிருந்தாலும் - சுவானம் அமேத்தியத்திலிருநதாலுங கிரகித்துக் கொள்ளலாம்.

௨௪௦—மாதாகள - இரத்தினஙகள் - கல்வி - தர்மம் - ஆசாரம் - நல்லவசனம் - இன்னும் பலபல சிற்பசாஸ்திரம் இவைகளெங்கவிடத்திலிருந்தாலுங கிரகித்துக்கொள்ளத் தக்கவைகள்.

௨௪௧—பிராமணன் அகப்படாமல் ஆபத்காலம் நேரிட்டால் க்ஷத்திரிய வைசியாளிடத்திலிருந்தாவது வேதத்தை யோதவேண்டியது. வேதம் — ஓதி முடிகிறவரையில் அக்குருவுக்குப் பணிவிடை செய்யவேண்டியது.

௨௪௨—மோக்ஷத்தை விரும்புகிற பிரமசாரியானவன் க்ஷத்திரிய வைசிய குருவினிடத்திலும், அனுஷ்டானமில்லாதபிராமண குருவினிடத்திலும், வேதமோதினபின்பு வாசஞ்செய்யக்கூடாது.

# மநுதர்மசாத்திரம்.

உசஙு—பிரமசாரிக்கு கலியாணத்தில் விருப்பமில்லாமல் குருகுலவாசத்திலேயே மனமிருந்தால் ஜிதேந்திரியனும் ஞானமுள்ள பிராமண குருவினிடத்தில் பிராணாந்தபரியந்தம் நைஷ்டிக பிரமசாரியாய் வசிக்கலாம்.

உசச—எவன் இறக்கிற வரையில் இந்தப்படி குருவுக்குப் பணிவிடை செய்கிறானோ அவன் சாஸ்வதமான மோக்ஷத்தை யடைகிறான்.

உசரு—சீடனானவன் வேதமோதுகிறதற்கு முந்தி குருவுக்கு பசு - வஸ்திரமுதலிய தக்ஷிணை கொடுக்கக்கூடாது. வேதமோதி முடிந்தபின்பு தான் விவாகஞ் செய்துகொள்ளக் குருவினிடத்து த்தரவு பெற்றுக்கொள்ளும்போது அவர் விரும்பியபொருளைக குருதக்ஷிணையாகக் கொடுக்கவேண்டியது.

உசசு—பூமி - சுவானம - பசு - குதிரை - பாதரக்ஷை - குடை - ஆசனம் - தானியம் - கறியமுது - வஸ்திரம் - இவைகளைக் கொடுத்தால் குருவுக்குச் சந்தோஷத்தை யுண்டுபண்ணும்.

உசஎ—நைஷ்டிக பிரமசாரியானவன் தன்குரு இறந்துவிட்டால் அவருடைய குணமுள்ள புத்திரனிடத்திலாவது, பத்தினியினிடத்திலாவது, ஞாதியினிடத்திலாவது, தன்றேக முள்ளவயில் பணிவிடை செய்துகொண்டு வசிக்கலாம்.

உசஅ—அவர்களு மில்லாவிடில் தன்னாசிரியன் ஓமஞ்செய்த வைதீகாக்கினி குண்டத்தின் சமீபத்தில் ஆசனம் போட்டுக்கொண்டு தினந்தோறும் அவ்வக்கினியில் சமித்தினாலே ஓமஞ் செய்துகொண்டு தன்காலத்தைக் கழிக்கவேண்டியது.

உசகூ—இதுவரையிற் சொல்லிவந்த விதிப்படி எந்தப் பிரமசாரியானவன் விரதத்தை யனுஷ்டிக்கிறானோ அவன் மோக்ஷத்தையடைகிறான். அவனுக்கு மறுபிறப்புக்கிடையாது.

இரண்டாவது அத்தியாயம்

முற்றிற்று.

மூன்றாவது.

## அத்தியாயம்.



### கிரகஸ்தா தருமம்.

முதலாவது—மேற்சொன்னபடி மூன்றுவேதமும் ஓதுவதற்காகக் குருவினிடத்தில் முப்பத்தாறு அல்லது பதினெட்டு - அல்லது ஒன்பது - வருஷம்வரையிலாவது- அல்லது ஓதிமுடிகிறவரையிலாவது - பிரமசாரிய விரதத்தை அநுஷ்டிக்கவேண்டியது.

உ—தனவேதத்தைமுன்னிட்டு மூன்று வேதங்களையாவது- இரண்டு வேதங்களையாவது - அல்லது - தன்வேதத்தை யாவது- பிரமசாரிய விரதம் வழுவாமல ஓதி கிரகஸ்தாசிரமத்தை யடைய வேண்டியது.

ங—பிதாவினிடத்தினின்றாவது அவரில்லாதபக்ஷத்தில்ஆசாரியரிடத்தினின்றாவது - விதிப்படி வேதமோதி முகிந்தவனாயிருக்கிற புத்திரனை - அல்லது - சிஷ்யனை பிதா - அல்லது- ஆசாரியன் புஷ்பசந்தனாதிகளாலே அலங்கரித்து உயர்ந்த ஆசனத்தில் உளுக்காரவைத்து கோதானவிரதஞ் செய்வித்து - பஞ்சாமிர்தத்தினாலுபசரிக்க வேண்டியது - இது சமாவர்த்தனம்.

### விவாகவிஷயம்.

ச—மேற்சொன்னபடி சமாவர்த்தனஞ் செய்யப்பட்ட பிரமசாரியானவன, குரு அல்லது தந்தையின் அனுமதிபெற்றுக்கொண்டு தன்வருணத்திற் பிறந்தவளாயும் லக்ஷணத்தோடு கூடியவளாயுமிருக்கிற கன்னிகையைக் கலியாணஞ்செய்துகொள்ள வேண்டியது.

ரு—தன் தாயின் எழுதலைமுறைக்குட்படாதவளாயும், தன் தகப்பன் கோத்திரத்திற் பிறவாதவளாயும், இருக்கிற கன்னிகையானவள் மூன்றுவருணத்தாருக்கும் - வைதீககாரியத்துக்கும்-புத்திரனையுண்டு பண்ணுகிறதற்குந்தக்க ஸ்திரீயாகச் சொல்லப்படுகிறாள்.

# மநுதர்மசாத்திம்.

சு—பசு - வெள்ளாடு - செம்மறியாடு - தனம் - தானியம் - இவைமுதலிய அதிகசம்பத்தையுடையவர்களாயிருப்பினும்மேற் சொல்லப்போகிற பத்துகுலத்தையும் விவாகசம்பந்தத்தில் நீக்கி விடவேண்டியது.

எ—சாதகாமாதி சமஸ்காரமில்லாதவன் குலம் - புருஷப்பிரசையில்லாமல் ஸதிரீபிரசையாகவே பிறகரும் குலம் - வேதமோதாத குலம்-தேகத்தில் நீளமானமயிருள்ளவன்குலம்-மூலவியாதியுள்ள குலம் - க்ஷயரோகமுள்ள குலம் - அக்கினிபுஷ்டியில்லாதவன் குலம் - பெருவியாதியுள்ள குலம்-வெணகுட்டமுள்ள குலம்-குஷ்டவியாதியுள்ள குலம் ஆக பத்தையும் நீக்கவேண்டியது.

அ—செம்பட்டமயிருள்ளவள் - அதிகவுயரமுள்ளவள் - திராப்பிணியுள்ளவள் - மயிரில்லாதவள் - உடம்பெல்லாமயிருள்ளவள்-குரூரமாகப் பேசுகிறவள் - செங்கணணுள்ளவள்.

கூ—நக்ஷத்திரம் - விருக்ஷம் - நதி - ாணசாதி - மலை - பக்ஷி-பாம்பு - வேலைக்காரன் இவற்றின பேருள்ளவள் - பயஙகரமானபேருள்ளவள் - இவ்வகை கன்னியனை விவாகஞ்செய்யககூடாது.

க0—அழகுள்ளவளாயும் - நல்லபேருள்ளவளாயும்- அன்னம்-யானை - இவற்றைப்போல் நடையுள்ளவளாயும் - மெல்லிதான சரீரம் - மயிர் - பல்- இவைகளையுடைத்தானவளாயும், சிறுகுரலுள்ளவளாயும் இருக்கிறகன்னிகையைக் கலியாணஞ செய்துகொள்ளவேண்டியது.

கக—எந்தக்கன்னிகைக்கு பிராதாயில்லாமலும், தகப்பன்இன்னானென்றறியக் கூடாமலும், போய்விடுமோ அவளை இந்தக்கோத்திரத்தாளென்றறியக் கூடாமையாலும் அவளிடத்திற் பிறக்கிற பிள்ளை புத்திரிகாபுத்திரனுவ னென்கிறதினாலும் - விவாகஞ்செய்யக்கூடாது. புத்திரிகாபுத்திரனென்பதை (ஒன்பதாவதத்தியாயத்திற்காண்க.)

கஉ—துவிஜர்களுக்கு முக்கியமாய் விவாகஞ்செய்யும் போது தன்வருணத்திலேயே விவாகஞ் செய்வதுயர்ந்தது காமத்தினுலே இரண்டாவது விவாகஞ் செய்வதாயிருந்தால் மேற்சொல்லப்போகிறபடி செய்துகொள்ள வேண்டியது.

கங—சூத்திரனுக்குத் தன் சாதியிலும், வைசியனுக்கு தன் சாதியிலும் சூத்திரசாதியிலும், க்ஷத்திரியனுக்கு தன்சாதியிலும் வைசிய சூத்திரசாதியிலும், பிராமணனுக்கு தன்சாதியிலும், மற்றமூன்று சாதியிலும் விவாகஞ் செய்துகொள்ளலாம்.

கச—பிராமணன் - க்ஷத்திரியன்- இவர்களுக்கு தன்வருணத்துக் கன்னிகையகப்படாத ஆபத்துக்காலத்திலும் சூத்திரகன்னிகையைமுதலில் விவாகஞ்செய்யக்கூடாது.

கரு—தன்சாதிக்குத்தாழ்ந்தசாதியில் விவாகஞ் செய்துகொள்ளுந் துவிஜர்கள் தன்குலத்தையும், புத்திரரையும் சூத்திரத்தன்மையை யடைவிக்கிருர்கள்.

கசா—சூத்திரசாதிக்கன்னிகையை கலியாணஞ் செய்கிறவன் பதிதனுகிருனென்று அத்திரியும் கௌதமரும் சொல்லுகிருர்கள் (இதுபிராமணவிஷயம்.) சூத்திரக்கன்னிகையினிடத்து புத்திரனை யுண்டுபண்ணுகிறவன் பதிதனுகிருன் என்று சௌனகர்சொல்லுகிருர் (இது க்ஷத்திரியவிஷயம்.) சூத்திரகன்னிகையினிடத்துப் பிறந்தவன் பதிதனுகிருனென்று பிருகுசொல்லுகிருர் (இது வைசிய விஷயம்.)

கஎ—படுக்கையில் சூத்திரகன்னிகையோடு சமமாய்ப்படுத்திருக்கிற பிராமணன் நரகத்தையடைகிருன் பிள்ளையுண்டுபண்ணினுல் பிராமணத்தன்மையினின்று நீங்கியேவிடுகிருன்.

கஅ—எவனுக்குத் தன்சாதியிற்பிறந்த பிள்ளையில்லாமல்சூத்திரசாதியிற் பிறந்தவன் வைதீக கர்மங்களைச்செய்கிருனே அந்த

அவிசை தேவர்களும் பிதுராக்களும் புசிக்கமாட்டார்கள் ஆகையால் அவனுக்குச் சுவர்க்காதி புண்ணியலோகமில்லை.

கக—சூத்திரஸ்திரீயின் அதரபானஞ்செய்தவனுக்கும், அவள்மூச்சுக்காற்று மேலேபட்டவனுக்கும், அவளிடத்திற் பிறந்தவனுக்கும், பிராயச்சித்தங்கிடையாது.

உ0—நாலுசாதியாருக்கும் இம்மையிலும் மறுமையிலும் நன்மையையுந் தீமையையும் உண்டுபண்ணுகின்ற எட்டு விவாகத்தையுஞ் சுருக்கமாகச் சொல்லுகிறேன்கேளுங்கள்.

உக—பிராமம் - தெய்வம் - ஆருஷம் - பிராஜாபத்தியம்- ஆசுரம் - காந்தருவம் - இராக்ஷசம் தாழ்ந்ததானபைசாசம் - ஆக. அ.

உஉ—எந்தவருணத்தானுக்கு எந்த விவாகம் உயர்ந்ததோ எந்த விவாகந்தாழ்ந்ததோ எந்தவிவாகத்தினால் பிறந்தபிள்ளையுயர்ந்தவனோ எந்தவிவாகத்தினாற்பிறந்தவன தாழ்ந்தவனோ இவைகளைமேலே சொல்லப்போகிறேன்கேளுங்கள்.

உந—பிராமணனுக்கு பிராமம்முதல் காந்தருவம்வரையில் கிரமமாக ஆறும், க்ஷத்திரியனுக்கு ஆசுரம்முதல் பைசாசம்வரையில் நான்கும், வைசியசூத்திராளுக்கு மேற்சொன்னநானகில் இராக்ஷசம் நீங்கலாக மூன்றும் தருமத்தைக்கொடுக்கத்தக்க விவாகங்களென்றறியவேண்டியது.

உச—ஆனால் பிராமணனுக்குபிராமம்முதல் நான்கினையும், க்ஷத்திரியனுக்கு இராக்ஷசத்தையும், வைசியசூத்திராளுக்கு ஆசுரத்தையும் உத்தமவிவாகமென்று பெரியோர்கள்சொல்லுகிறார்கள்.

உரு—பிராஜாபத்தியமுதல் பைசாசவரையில் ஐந்துவிவாகத்துள் மூன்று உயர்ந்தது, இரண்டு தாழ்ந்தது, ஆகையால் ஆசுரம் பைசாசம் இவ்விரண்டையும் பிராமண க்ஷத்திரியாள் செய்யலாகாது.

உசா—காந்தருவம் இராக்ஷசம் இவ்விரண்டும் க்ஷத்திரியனுக்குயாந்ததாகவிருப்பதால் அவ்விரண்டையும் பண்ணிக்கொண்டாலும் அல்லது ஒன்றைப்பண்ணிக்கொண்டாலும் கொள்ளலாம்.

உஎ—வேதமோதினவனுயும், நல்லொழுக்கமுள்ளவனுயு மிருக்கிற பிரமசாரியைத் தானுகவே அழைப்பித்து அவனை நூதனவஸ்திரத்தா லலங்கரித்து கன்னிகையை வஸ்திரா பரணங்களாலலங்கரித்து அவனுக்கு அக்கன்னிகையைத் தானஞ்செய்வது பிராமவிவாகம்.

உஅ—சோதிஷ்டோமாதி எக்கியத்தில் தனக்குப்புரோகிதனுகவிருப்பவனுக்குத் தன்பெண்ணை அலங்கரித்துக் கொடுப்பதை தெய்வவிவாகமென்று சொல்லுகிறாகள்.

உகூ—தான் செய்யவேண்டிய யாகாதிதர்மத்துக்காக வரனிடத்தில் நின்றும் ஒரு ரிஷபம் - ஒருபசு அல்லது இரண்டு ரிஷபம்-இரண்டுபசு - இவைகளைவாங்கிக் கொண்டு கலியாணஞ்செய்துகொடுப்பதை ஆருஷவிவாகமென்று சொல்லுகிறாகள்

௩௦—ஒருபிரமசாரியை யழைத்துப் பூசித்து தன்பெண்ணைத் தானம்பண்ணும்போது நீங்களிருவருமாய் தருமங்களைச் செய்யுங்கோளென்றுசொல்லிக்கொடுப்பதை பிராஜாபத்தியமென்று சொல்லுகிறார்கள்.

௩க—பெண்ணின் தகப்பனுக்கு கேழ்க்கும்பணத்தைக்கொடுத்து பெண்ணுக்கும் பூஷணங்களைப்போட்டு பெண்ணைவாங்கிவிவாகஞ்செய்து கொள்ளுவதை ஆசுரவிவாகமென்று சொல்லுகிறார்கள்.

௩உ—ஸ்திரீயும் புருஷனும் ஒருவர்க்கொருவர் புணர்ச்சியின் ஆசையால் மனமொத்து தாங்களாகச்சேர்தலை காந்தருவமென்று சொல்லுகிறார்கள்.

௩௩—ஒருவன் பலத்தினாலே ஒருகன்னிகையை அழும்போது அவள்வீட்டிலிருந்தும், அவளது பந்துக்களையடித்தும், கொன்றும், பிளந்தும், வலிமையாற்கொண்டுபோகிறானோ அதை இராக்ஷச விவாகமென்று சொல்லுகிறார்கள்.

௩௪—ஒருகன்னிகை தூங்கும்போதும், குடியினால் மயங்கியிருக்கும்போதும், பித்துகொண்டவளா யிருக்கும்போதும் அவளுடனே புணர்ச்சிசெய்வது முன்சொன்ன ஏழுவிவாகங்களுக்குந் தாழ்ந்ததான பைசாசவிவாகமென்று சொல்லுகிறார்கள்.

௩௫—ஜலத்தைக் கையில்இட்டுக் கன்னிகாதானஞ்செய்வதே பிராமணனுக்குயாந்தது. மற்ற மூன்றுவருணத்தாருக்கும் அப்படியேசெய்துகொள்ள வேண்டுமென்னும் நியமமில்லை வாயினால் மந்திரஞ்சொல்லியுஞ் செய்துகொள்ளலாம்.

௩௬—ஓ ரிஷீஸ்வரர்களே! இதுவரையில் விவாகங்களின் கிரமங்களையுங்களுக்குச் சொன்னேன் இனி அந்தந்த விவாகங்களாற் பிறக்கும் பிள்ளைகளுக்கு மநுவினாற்சொல்லப்பட்ட குணதோஷங்களைச் சொல்லுகிறேன்.

௩௭—பிராமவிவாகஞ்செய்து பிறந்தபிள்ளை சாதுவாயிருந்தால் தன்முன் பத்துத்தலைமுறையிலுள்ள பிதுருக்களையுந் தன்னையும் நரகத்துக்குப்போகாமல் நல்ல லோகத்தை யடைவிக்கிறான் அவனுக்குப் பின்னும் பத்துத் தலைமுறைவரையில் சாதுக்களாகவே புத்திராபிறந்து நல்லகதியையடைகிறார்கள்.

௩௮—தெய்வவிவாகஞ்செய்து பிறந்தபிள்ளை தன் முன்னேழு பின்னேழு தலைமுறையிலுள்ளவர்களையும், ஆருடவிவாகஞ்செய்தவனுக்குப்பிறந்த பிள்ளை முன்மூன்று பின்மூன்று தலைமுறைகளிலுள்ளவர்களையும், பிராஜாபத்திய விவாகஞ்செய்தவனுக்குப்பி

றந்தபிள்ளை முன்னூறு பின்னூறு தலைமுறையிலுள்ளவர்களையும் தன்னையும் கடைத்தேறப்பண்ணுகிறார்கள்.

௩௯—பிராமமுதலான எட்டுவிவாகங்களுக்குள் இப்போது கிரமமாகச்சொல்லிவந்த நாலுவிவாகத்தாற்பிறந்த பிள்ளைகள்மாத்திரம், பிரம்மதேஜசுள்ளவாகளாயும் பெரியோர்களால் புகழப்பட்டவர்களாயுமிருக்கிறார்கள்.

௪௦—மேலும் அழகு - பலம் - குணம் - பொருள் - கீர்த்தி- போதுமான அனுபோசம் - தாமம்-இவைகளுள்ளவாகளாய் நூறு வருஷம் ஜீவித்திருக்கிறாகள்.

௪௧—மற்ற நான்குவிவாகத்தாற்பிறந்த பிள்ளைகள்கொலைசெய்கிறவர்களாயும், பொய்சொல்லுகிறவாகளாயும், வேதத்தையும், யாகாதிதருமத்தையும், பகைக்கிறவாகளாயும் இருக்கிறார்கள்.

௪௨—முக்கியமாய் உத்தமமான விவாகத்தாற்பிறக்கும் பிள்ளைகள் சாதுக்களாயிருப்பாகள் நிந்திக்கத்தக்க விவாகத்தாற் பிறக்கும்பிள்ளைகள் துஷ்டர்களாயிருப்பார்கள். ஆகையால் கெட்டதானவிவாகஙகளைச் செய்யக்கூடாது.

௪௩—தன்சாதியிற் கலியாணம்பண்ணும்போது பாணிக்கிரகணத்தைமுன்னிட்டு விவாகஞ் செய்துகொள்ளவேண்டியது. மற்ற சாதியிற் செய்துகொண்டால் மேற்சொல்லும்விதிப்படி செய்துகொள்ளவேண்டியது.

௪௪—க்ஷத்திரியஸ்திரீ தனக்குமேலான வருணத்தானைக் கலியாணஞ்செய்து கொள்ளும்போது அவன் பிடித்துக்கொண்டிருக்குந் தண்டத்தையும், வைசியமாது அவ்விதமாகக் கலியாணஞ்செய்துகொள்ளும்போது அவன்பிடித்துக்கொண்டிருக்குஞ் சாட்டைக்கயிற்றினுனியையும், சூத்திரஸ்திரீ அவனுடையவஸ்திரத்தினுனியையும் பிடித்துக்கொண்டு விவாகஞ் செய்துகொள்ளவேண்டியது.

௪௫—மனிதனானவன் பரதாரத்தைவிரும்பாமல் தன்தாரத்தினிடத்திலேவிடாத அன்புள்ளவனாய் அவளுடைய மேற்சொல்லப்போகிற ருதுகாலத்தில் சேரவேண்டியது. அல்லது மற்றகாலத்தில் அவளாலே விரும்பப்பட்டாவது, அல்லது தனக்கே புணர்ச்சி விருப்பத்தாலாவது, பருவகாலம் நீங்கலாக சேரவேண்டியது.

௪௬—மாதர்களுக்கு ருதுகாலம் வழக்கமாய் பதினாறுநாளென்று சொல்லப்படுகின்றது. அதில் மாதவிடாயானது முதல் நாலு நாள் பெரியோர்களாலே நிந்திக்கப்பட்டிருக்கின்றது.

௪௭—மேற்சொன்ன நாலுநாளுடன் ஏகாதசி திரயோதசி இவ்விரண்டையும் நீக்கி மற்றப்பத்துதினத்தில் சேரவதே உயர்ந்ததாகச் சொல்லுகிறார்கள்.

௪௮—மாதவிடாயானது துவக்கி - ஆறு - எட்டு - பத்து - பன்னிரண்டு - பதினாலு - பதினாறு - இந்த இராத்திரிகளில் சேர்ந்தால் பிள்ளைகளும் ஐந்துமுதல் ஒற்றைப்பட்ட நாள்களில் சேர்ந்தால் பெண்களும் பிறக்கின்றது. ஆகையால் புத்திரவிருப்புள்ளவன் இரட்டைதினத்திற் சேரவேண்டியது.

௪௯—புருஷனுக்கு சுக்கிலம் அதிகமாகவெளிப்படுமானால் புத்திரனாகவும், மாதர்களுக்கு சுரோணிதமதிகமாகவிருந்தால் ஸ்திரீயாகவும், இருவருக்குஞ் சரியாயிருந்தால் பேடியாகவும், இருவருக்கும் இல்லாமலிருந்தால் அல்லது சொற்பமாயிருந்தால் கொப்பவுற்பத்தியில்லாமையும் உண்டாகிறது.

௫0—எவன் நீக்கவேண்டியதான நாலுநாளையும் ஏகாதசி திரியோதசி இந்நாளையும், அமாவாசி பௌர்ணமாவாசியும் நீக்கி மற்றதினத்திரவினில் தன்மனைவியுடன் சேருகிறானோ அவன் கிரகஸ்தனாக விருப்பினும் பிரமசாரியாகவே சொல்லப் படுகிறான்

௫௧—பெண்ணைப்பெற்றதகப்பன் தெரிந்தவனாயிருந்தால் அந்தப் பெண்ணுக்காகக் கொஞ்சமேனும் பணம்வாங்கிக் கொண்டு கொடுக்கக்கூடாது. அப்படியாசையால் வாங்கிக்கொண்டால் பெண்ணைவிற்றவனாகவே ஆகிவிடுகிறான்.

௫௨—ஒருபெண்ணின் கணவனேனும் தகப்பனேனும் அவளுக்கு விவாககாலத்தில் ஸ்திரீதனமாகக் கொடுக்கப்பட்ட ஆடை-ஆபரணம் - வாகனம் இவைகளை பின்னும் தாங்களுபயோகப்படுத்திக்கொண்டால் அவர்கள் அந்தப்பாவத்தினாலே அதோகதியையடைகிறார்கள்.

௫௩—ஆருடவிவாகத்தில் ஒரு இடபம் - ஒருபசு அல்லது இரண்டு இடபம் - இரண்டுபசு வாங்கலாமென்று சிலபெரியோர்கள் அபிப்பிராயத்தை முன்சொல்லியிருக்கிறோம். அதுவும் தருமகாரியத்துக்கன்றி தன்னாசையினாலே வாங்கிக்கொள்ளுகிறது நியாயமன்று கொஞ்சமாவது, அதிகமாவது தனதாசையால் வாங்கினால் அதுவும் விற்றதுபோலவேயாகும்.

௫௪—எந்தப்பெண்களின் பந்துக்கள் பணம்வாங்காமல் தானஞ்செய்கிறார்களோ அதுவிக்கிரயமன்று. அவர்கள்தான் அந்தப்பெண்ணினிடத்தில் தயையும் - அன்பும் - உடையவர்களா யிருக்கிறார்கள்.

௫௫—தந்தை - கணவன் - உடன்பிறந்தார்- மைத்துனர் இவர்கள் க்ஷேமத்தை விரும்பினவர்களானால் பெண்டுகளை-கலியாணகாலத்திலும் பின்னும் பூஷணமுதலானவற்றால் உபசரித்து சந்தோஷப்படுத்தவேண்டியது.

௫௬—எந்தவீட்டில் மாதர்கள் பூஷணமுதலியவற்றால் சந்தோஷத்தை யடைந்திருக்கிறார்களோ அந்தவீட்டில் எல்லாதெய்வங்களும் சந்தோஷத்துடன் வசிக்கின்றார்கள். எந்தவீட்டில் அவ்வாறு பூசிக்கப்படவில்லையோ அந்தவீட்டில் செய்கிற காரியங்களெல்லாம் பலனில்லாததாகப் போய்விடுகின்றன.

# மநுதர்மசாத்திரம்.

௫௭—எந்தவம்ஸத்தில் உடன்பிறந்தாள் முதலியவர்கள் ஆடையாபரணமில்லாததால் வியசனப்படுகிறார்களோ அந்தக்குலம் நசித்துப்போகின்றது. எந்தகுலத்தில் அவர்கள் வியசனப்படவில்லையோ அந்தகுலம் எப்போதும் விருத்தியடைகின்றது.

௫௮—மேலும்மாதாக்கள் தங்களை பிதாமுதலியவர்கள் உபசரிக்காததால் இந்தகுலம் அழிந்துபோகக்கடவதென்று எந்தகுலத்தை சாபமிடுகிறார்களோ அந்தகுலம் சூனியம் வைக்கப்பட்டதுபோல் நசித்துப்போய்விடும்.

௫௯—ஆகையால் க்ஷேமத்தை கோரிய மனிதர்கள் எப்போதும் தனவீட்டில் நடக்கும் விரதங்கள் கலியாணங்கள் இவைமுதலிய விசேஷகாலங்களில் உடன்பிறந்தாள் முதலான மாதர்களை பூஷணம் வஸ்திரம் சாப்பாடு இவற்றினால் சந்தோஷப் படுத்தவேண்டியது.

௬0—எந்த வீட்டில் மனைவியினுடைய பணிவிடை முதலியவற்றால் கணவன் பரதாரத்தைநினையாமலும், கணவனுடைய அன்பு முதலியவற்றால் மனைவி பரபுருஷனைநினையாமலும், ஒருவர்க்கொருவர் சந்தோஷத்துடன் இருக்கிறார்களோ அந்தகுலத்தில் கலியாணங்கள் நிச்சயமாயுண்டாகின்றன.

௬௧—மனைவியானவள் ஆடையாபரணத்தால் விளங்காமற்போனால் கணவனைசந்தோஷமுள்ளவனாகச் செய்யமாட்டாள் கணவனுக்குச் சந்தோஷமில்லாமற்போனால் புணர்ச்சிசெய்ய மாட்டான் அதனால் புத்திரவிருத்தியில்லாமலே போய்விடும்.

௬௨—அந்தமனைவியானவள் ஆடைமுதலியவற்றால் விளங்கினவளாயிருந்தால் கணவன்புணர்ச்சியால் அந்தக்குலம் விருத்திய

டைகின்றது. மனைவியைக் கணவன் விரும்பாமற் போனால் அவள் பரபுருஷனோடு புணர்ச்சி செய்யவரும், அதனால் அக்குலமே தாழ்ந்துவிடும்.

கூரு—அந்தந்தச் சாதியானுக்குத் தகாதவிவாகஞ்செய்வதாலும், சாதகர்மாதிகளைச் செய்யாமையாலும், வேத மோதாமையாலும், பிராமணன்முதலிய பெரியோர்களைப் பூசியாமையாலும், உயர்ந்தகுலமும் இழிந்தகுலமாகிவிடும்.

கூச—சித்திரவேலை செய்வதாலும், விவகாரஞ் செய்வதாலும், சூத்திரஸ்திரீயைமாத்திரம் கலியாணஞ்செய்து பிள்ளை பெறுவதினாலும், பசு - குதிரை - பண்டி - இவற்றை விற்பனை செய்வதினாலும் பயிரிடுவதாலும் இராஜசேவையாலும்.

கூரு—எக்கியம்பண்ணி வைக்கத்தகாத விராத்தியன் முதலானவர்களுக்கு அதைச் செய்வித்தலினாலும் தெய்வத்தை யொப்புக்கொள்ளாததினாலும், தத்தம் மந்திரா னுஷ்டானங்களைச் செய்யாததனாலும் நற்குலம் தாழ்வை யடைகின்றது.

கூசு—மந்திரா னுஷ்டானத்தோடு கூடினகுலம் சொற்பபொருளுள்ளதா யிருப்பினும் உயர்ந்த குலத்தோடு நினைக்கத்தக்கதாயும் கீர்த்தியை யுண்டுபண்ணுகிறதாயும் ஆகிறது.

கூஎ—இதுவரையில் விவாகத்தின் குணதோஷங்களைச் சொல்லி மேல் கிரகஸ்த தருமத்தைச் சொல்லுகிறார். விவாகமானபின்பு வைதிகாக்கினியில் தன் சூத்திரத்திற்சொல்லிய ஔபாசனமுதலிய கருமங்களை விதிப்படிநடத்தி பஞ்சமஹா வெக்கியத்தில் சேர்ந்ததான வைசுவதேவத்தை நாடோறும் செய்யவேண்டியது.

## பஞ்சமகா எக்கியவிதி.



கூஅ—கிரகஸ்தன் - ஏர்திரம் அல்லது முறம் - அம்மி-துடைப்பம் - உரல் - உலக்கை- தண்ணீர்க்குடம் இவ்வைந்தை

யோகப் படுத்திக்கொள்ளுவதால் அவற்றால் அவனுக்கு ஐந்துகொலை யுண்டாகின்றது.

சூகூ—அந்த ஐந்துபாபங்களையும் போக்குவதற்காக மகருஷிகளால் தினந்தோறும், ஐந்துமஹா வெக்கியங்கள் கிரகஸ்தனுக்குக் கிரம்மாக விதிக்கப்பட் டிருக்கின்றன.

எ௦—அவ்வைந்து எக்கியத்தில் வேதமோதுதல் பிரம்ம எக்கியம். அன்னத்தினலாவது, ஜல தருப்பணத்தினலாவது, பிதுர்க்களைக்குறித்து திருப்திசெய்வது பிதுா எச்ஙயம். தேவதைகளைக்குறித்து அக்கினியிலோமஞ்செயவது தேவஎககியம். வாயசபலி முதலானவை வைப்பது பூதஎககியம. அதிதிகளுககுச் சாப்பாடுபோடுவது மானுடஎககியம. ஆக மகாஎககியம ஐநது.

எக—இந்த ஐந்துமஹா எககியஙகளையும, தன் சக்திககுத் தக்கபடி எவன செய்கிறானே அவன கிரகஸ்தாசிரமத்தி லிருநத போதிலும் மேற்சொன்ன ஐநதுகொலைகளின தோஷஙகளை யடைகிறதில்லை.

எஉ—தான வழிபடுதேவதைகள் - அதிதிகள் - வேலைக்காரர்கள் - தாய் - தநதைமுதலிய பிதாககள்- தனனுத்துமா- ஆகிய இவ்வைநதுபோகளுககும, எவன அனனமுதலியவற்றால் திருப்தி செய்யவில்லையோ அவன மூசசுவிட்டுககொண டிருந்தாலும் இறந்தவனுக் கொப்பாவான்.

எ௩—சிலபெரியோாகள் இவவைநது மஹா வெக்கியங்களுக்கும் அகுதம் என்றும், குதம் எனறும, பிரகுதமென்றும், பிராமியகுதமென்றும், பிராசிதமென்றும், வேறான நாமதேயஙகளைச் சொல்லுகிறாகள்.

எச—அகுதமாவது பிரம்மவெக்கியம், குதமாவது தேவவெக்கியம், பிரகுதமாவது பூதவெக்கியம், பிராமியகுதமாவது மானுடவெக்கியம், பிராசிதமாவது பிதுரெக்கியம்.

# மூன்றுவதத்தியாயம்.

எரு—சிலவேளை வறுமையால் மானுட எக்கியம் பண்ணுதற்குச் சக்தியில்லாவிடினும் பிரம்ம எக்கியம் - தேவ எக்கியம் இவைகளையாவது இடைவிடாமற் செயயவேண்டியது. தேவ எக்கியத்தில் அன்புள்ளவன் தாபரசங்கமத்தை இரக்ஷிக்கிறான்.

எசு—தேவர்களைக்குறித்து அக்கினியில்செய்யப்படுகிற ஓமங்கள் சூரியனையடைகின்றன. அவரிடத்தினின்றும் வருஷமுண்டாகின்றது; அதனாலே தானியங்களுண்டாகின்றன. அதனாலே ஜீவகோடிகள விருத்தியடைகின்றனவென்று வேதத்திற் சொல்லப்பட்டிருக்கின்றது.

எஎ—சர்வஜெநதுக்களும் பிராணவாயுவையடைந்து எவ்விதமாய்ஜீவிக்கின்றனவோ, அவ்விதமாய பிரமசாரி- வானப்பிரஸ்தன்-சந்நியாசி - இம்மூவரும்-கிரகஸ்தனை அநுசரித்து ஜீவிக்கிறார்கள்.

எஅ—எந்தக்காரணத்தாலே கிரகஸ்தன் வேதம் ஓதி வைப்பதினாலும் பிக்ஷைபோடுவதினாலும் மற்ற மூன்றாசிரமத்தாரும் காப்பாற்றப் படுகிறாகளோ அந்தக்காரணத்தாலே அவனாசிரமமுயர்ந்ததென்று சொல்லப்படுகின்றது.

எகூ—இம்மையில் சுகத்தையும் மறுமையில் சாஸ்வதபுண்ணிய லோகத்தையும் எவன் விரும்புகிறானோ அவன் அந்தக்கிரகஸ்தாசிரமத்தை முயற்சியுடன் காப்பாற்றவேண்டியது. அது இந்திரியக்கட்டுப்பாடில்லாதவாகளால் காப்பாற்றுவதரிது.

அ0—ரிஷிகள் - பிதுரக்கள் - தேவர்கள் - பூதங்கள் - அதிதிகள் - இவர்கள் கிரகஸ்தரிடத்தினின்றுந் திருப்தியைவிரும்புகிறார்கள். ஆகையால் அதைமேற்சொல்லுகிறபடி செய்யவேண்டியது.

அக—வேதாத்தியயனத்தினாலே ருஷிகளையும் ஓமத்தினாலே தேவர்களையும், சிரார்த்தத்தினாலே பிதுரக்களையும், போசனத்தி

ளாலே அதிதிகளையும், பலிபோடுவதினாலே பூதங்களையும், திருப்தி செய்விக்க வேண்டியது.

அ௨ — தினந்தோறுஞ் செய்யத்தக்கதான பிதுர் எக்கியத்தை அன்னத்தினாலாவது அல்லது - சக்திக்குள்ளபடி ஜலதருப்பணத்தினாலாவது - பால் - கிழங்கு - பழம் - இவைகளினாலாவது பிதுர்க்களின் பிரீதியின்பொருட்டு செய்யவேண்டியது.

அ௩—பஞ்சமஹா எக்கியத்தில் சேர்ந்ததான பிதுர் எக்கியத்தில் ஒருபிராமணனையாவது புசிப்பிக்கவேண்டியது. பூத எக்கியத்தில் ஒருவனையும் புசிப்பிக்கவேண்டிய தில்லை. பலிமாத்திரம் போட வேண்டியது.

அ௪—வைசுவதேவத்திற்காக பாகஞ் செய்யப்பட்டிருக்கிற அன்னத்தை லௌகிகாக்கினியில் மேற் சொல்லப்போகிற தேவதைகளைக் குறித்து மூன்றுவருணத்தாரும் நாடோறும் ஓமஞ் செய்ய வேண்டிய.

அ௫—அக்கினிக்கும, சந்திரனுக்கும், அக்கினிஷோமர்களுககு ஒன்றாகவும், விஸ்வேதேவர்களுக்கும், தன் வந்திரிக்கும்.

அ௬—குருவுக்கும், அனுமதிக்கும், பிரஜாபதிக்கும், ஆகாசபூமிகளுக்கு ஒன்றாகவும், இவைகளின்முடிவில் ஸ்விஷ்ட கிருதுவென்னும் அக்கினிக்கும் ஓமம் செய்யவேண்டியது.

அ௭—இந்தப்படி அந்தந்த தேவர்களுக்கு ஓமஞ் செய்யும் போது அந்தந்த தேவர்களைத் தியானஞ்செய்ய வேண்டியது. பின்பு கிழக்குத்திக்கில் இந்திரனுக்கும், இந்திரபரிஜனங்களுக்கும், தெற்குத்திக்கில் யெமனுக்கும், இயமபரிசனங்களுக்கும், மேற்குத்திக்கில் வருணனுக்கும், வருணபரிசனங்களுக்கும், வடக்குத்திக்கில் சோமனுக்கும், சோமபரிசனங்களுக்கும் வரிசையாய் பூமியில் பலிவைக்கவேண்டியது.

அஅ—தேவர்களுக்கு வீட்டின்வாசற்படியிலும்,ஜலதேவதைகளுக்கு ஜலத்திலும், வனதேவதைகட்கு உரலுலக்கையிரண்டிலுமாவது அல்லது - ஒன்றிலாவது பலிவைக்கவேண்டியது.

அகூ—தன்வீட்டின் வடகிழக்கில் அல்லது தன்சயனத்தின் தலைப்பக்கத்திலாவது லட்சுமிக்கும், தனவீட்டின் தென்மேற்கிலாவது அல்லது தன்சயனத்தின் கார்பக்கத்திலாவது பத்திரகாளிக்கும், வீட்டினடுவில் பிரமனுக்கும், வாஸ்துபுருஷனுக்கும், பலிவைக்கவேண்டியது.

கூ0—விசுவேதேவர்களுக்கும், பகலிற்சஞ்சரிக்கும் பிராணிகளுக்கும், இரவிற்சஞ்சரிக்கும் பிராணிகளுக்கும், முற்றத்திலாவது இல் பலிபோடவேண்டியது.

கூக—சர்வாந்திரியாமிக்கு மெத்தைமேலாவது அல்லது - தன்பின்பக்கத்திலாவது - பலிவைக்கவேண்டியது. பிதுர்க்களுக்கு மிருந்த எல்லாவன்னத்தையும் தென்முகமாகக் காலைமடித்துக்கொண்டு பூமியில்பலிவைக்கவேணடியது.

கூஉ—பின்னும் வீட்டிற்குப்பாகஞ் செய்திருக்கிற அன்னத்தில் கொஞ்சமெடுத்துக்கொண்டுவந்து - நாய் - பதிதன் - சண்டாளன் - தீராப்பிணியுள்ளவன் - காகம் - கிருமி - இவைகளுக்கு சுத்தபூமியில் மெல்லெனபலி வைக்கவேண்டியது. இதுபூதஎக்கியம்.

கூங—இந்தப்பிரகாரம் எவன தினந்தோறும் சகலபிராணிகளையுந் திருப்திசெய்விக்கிறனே அவன் தேசோரூபனய் அர்ச்சிராதிமார்க்கத்தினாலே மேலானமோக்ஷத்தையடைகிறான்.

கூச—இந்தப்படி பூதஎக்கியத்தைச்செய்து பின்பு அதிதினை முன்னம் புசிப்பிக்கவேண்டியது. பிரமசாரி

ளுக்கு நல்வார்த்தைசொல்லுதல் கால்கழுவுதல் முதலியவுபசாரத்தோடு பிக்ஷையிட்டுப் பின்னவர்கள்கையில்ஜலம்விடவேண்டியது.

௯௫—தன்னாசாரியனுக்கு ஒருபசுவை சுவர்ன பூஷணத்தாலலங்கரித்து தானஞ்செய்தால் எந்தப்புண்ணிய மடையப்படுகிறதோ அதை - பிரமசாரி முதலானவர்களுக்கு விதிப்படி பிக்ஷையிடுவதால் கிரகஸ்தன் அடைகிறான்.

௯௬—அதிகமாக பிக்ஷைகொடுப்பதற்குச சக்தியில்லாதவன் ஒருகவளத்துக்குக் குறையாத அன்னத்தையும் தாகத்துக்குத்தீர்த்தத்தையும் தன்வீட்டிலுள்ள பதார்த்தங்களையும் வேதம்அதன்பொருள் இவற்றையறிந்த பிராமணனுக்கு விதிப்படி பூசித்துக் கொடுக்கவேண்டியது.

௯௭—வேதம் - இவற்றின்பொருள் இவைகளையறியாத பிராமணனுக்கு தேவர்களையும் பிதுர்க்களையுங்குறித்து தெரியாமையால் கொடுக்கப்பட்ட தானங்கள் சாம்பலிற்செய்த ஆகுதிபோல நசித்துப்போய் விடுகின்றன.

௯௮—கல்வி - தவம் - இவைகளுள்ளவர்களாயிருக்கிற பிராமணர்களுக்குக் கொடுக்கப்பட்ட தானங்கள் அக்கினியிற்செய்த ஓமம்போற் பிரகாசிக்கின்றன. பின்னும் இம்மையில் வியாதி - சத்துரு - இராஜபீடை - இவற்றினாலுண்டான பயத்தில் நின்றும் மறுமையில் நரகத்தினின்றும் காப்பாற்றுகின்றன.

௯௯—தன்வீட்டிற்குச் சுயமாகவந்த அதிதிக்கு காலுக்குத்தண்ணீர்கொடுத்து ஆசனத்தி லுட்காரவைத்து தன்வீட்டிலிருக்கும் பதார்த்தங்களுடன் அன்னமிட்டு விதிப்படி யுபசாரஞ்செய்ய புசிவைக்கவேண்டியது